இந்த சங்கரர் அவரது ஐயங்களை நன்கு விளக்கப்பெற்ற காரணங்களைக் கொண்டு சமாதானம் செய்தார். வாதம் வெகு நாட்கள் தொடர்ந்திருக்கும் போது. பத்மபாதர் தியானத்தால் "ஆசார்ய சங்கரர் சிவனே, முதியவர் வியாஸர் ஸ்ரீ விஷ்ணுவே" என உணர்ந்து மகிழ்ந்தவராகக் கைகூப்பியவராக அவர்கள் இருவரையும் அணுகி, பெருமதிப்பு கொண்ட ஸூத்ரமியற்றியவரும் பாஷ்யமியற்றியவருமான தங்களிருவரையும் வணங்குகிறேன்" எனக் கூறிக்கொண்டே உடன் வணங்கினார். சங்கரர் வியப்படைந்தவராக ஆனார்.

कृताञ्जलिस्ततो व्यासमुपतस्थे स शङ्करः ।
तमुवाचातिहृष्टात्मा व्यासस्तुष्टोऽस्मि शङ्कर ! ॥ १७ ॥

ततः स शङ्करः कृताञ्जलिः व्यासं उपतस्थे । व्यासः अतिहृष्टात्मा तं उवाच – "शङ्कर ! (अहं) तुष्टः अस्मि ।

பிறகு அந்த சங்கரர் கைகூப்பியவராக வியா ஸரை வணங்கினார். வியாஸர் மிகவும் மனம் மகிழ்ந்தவராக அவரை (ப்பார்த்து)ச் சொன்னார் – "சங்கரரே (நான்) மிகவும் மகிழ்ந்தவனாகிறேன்.

गीतासूत्रोपनिषदां भाष्यं विरचितं त्वया ।
युक्तं गोविन्दशिष्यस्य तत्प्रख्यापय सर्वतः ॥ १८ ॥

त्वया गीतासूत्रोपनिषदां भाष्यं विरचितम् । तत् गोविन्दशिष्यस्य (तव) युक्तम् । (तत्) सर्वतः प्रख्यापय ।

கீதை, பிரும்ம ஸூத்திரம், உபநிடதங்கள் இவற்றிற்கு உம்மால் பாஷ்யம் எழுதப்பட்டுள்ளது. அது கோவிந்தரின் சீடரான உமக்கு ஏற்றது. அதனை எங்கும் பரப்புவீராக.

ब्रह्मणानुमतो भूयस्त्वामाशासे यतीश्वर ।
जन्मनाऽष्टवयस्कस्त्वं यतिः प्रापोऽष्टवत्सरान् ॥ १९ ॥

துறவிகளில் உத்தமரே ! பிரும்மாவினால் அனுமதிக்கப் பெற்றவராக மறுபடி ஆசீர்வதிக்கிறேன். பிறப்பால் எட்டு வயது பெற்ற நீர் துறவியாகி எட்டுவயது கூடப்பெற்றீர்.

पुनः समाः षोडशायुरस्तु ते विश्वभूतये।
सर्वतन्त्रस्वतन्त्रस्त्वं तत्त्वं बोधय विस्तरात् ॥ २० ॥

ते विश्वभूतये पुनः षोडश समाः आयुः अस्तु। त्वं सर्वतन्त्र स्वतन्त्रः विस्तरात् तत्त्वं बोधय।

*உமக்கு உலக நன்மைக்காக மேலும் 16 ஆண்டுகள் ஆயுள் இருக்கட்டும். நீர் எல்லா சாஸ்திரங்களிலும் தன்னிஷ்டப்படி செயலாற்றல் பெற்றவராக விளக்கமாகத் தத்துவத்தைப் போதிப்பீராக.*

इत्थं लब्ध्वाऽऽयुषो दैर्घ्यं व्यासाच्छङ्करदेशिकः।
प्रतस्थिवान्दिशि विदिश्यद्वैतं बोधयन् बुधान् ॥ २१ ॥

शङ्करदेशिकः इत्थं व्यासात् आयुषो दैर्घ्यं लब्ध्वा दिशि विदिशि बुधान् अद्वैतं बोधयन् प्रतस्थिवान्।

*சங்கரகுரு வியாஸரிடமிருந்து ஆயுளின் நீட்சியைப் பெற்று திக்கிலும் விதிக்கிலும் அறிவாளிகளை அத்வைததத்துவத்தை அறியச் செய்பவராகக் கிளம்பினார். (திக்கு - கிழக்கு முதலியவை. விதிக்கு - தென்கிழக்கு முதலியவை)*

कालटीसम्भवः कश्चिद्विष्णुशर्माभिधो वटुः।
सहाध्यायी शङ्करस्य तमन्विच्छन्नुपासदत् ॥ २२ ॥

कालटीसंभवः शङ्करस्य सहाध्यायी विष्णुशर्माभिधः कश्चित् वटुः तं (शङ्करं) अन्विच्छन् उपासदत्।

*காலடியில் பிறந்தவனும், சங்கரருடன் கூடப்படித்தவனும், விஷ்ணுசர்மா என்ற பெயருள்ளவனுமான ஒரு மாணவன் அவரைத் தேடி வந்தான்.*

प्रार्थयामास शिष्यत्वेनात्मनो ग्रहणं वटुः।
दत्वा श्रीचित्सुखाख्यां तं यतिं चक्रे यतीश्वरः ॥ २३ ॥

वटुः शिष्यत्वेन आत्मनः ग्रहणं प्रार्थयामास। यतीश्वरः श्रीचित्सुखाख्यां दत्वा तं यतिं चक्रे।

*மாணவன் சீடனுகத் தன்னை ஏற்க வேண்டினுன். துறவிகளின் தலைவரான சங்கரர் ஸ்ரீசித்ஸுகர் என்ற பெயரைத்தந்து அவனைத் துறவியாக்கினுர்.*

शीतार्दितं स गोविन्दगुरुं परिचरन् हिमे।
तप्तोदकं प्रार्थयत शिवं चन्द्रकलाधरम्॥ २४॥

सः (शङ्करः) हिमे शीतार्दितं गोविन्दगुरुं परिचरन् चन्द्रकलाधरं शिवं तप्तोदकं प्रार्थयत।

*அந்த சங்கரர் பனிக்காலத்தில் குளிரால் வாட்டப்பெற்ற கோவிந்த குருவை (விற்குப்) பணிவிடை புரிபவராக சந்திரகலையை தரித்துள்ள சிவனை(னிடம்) வெந்நீரை வேண்டினுர்.*

तप्तोदलहरीं शम्भुः प्रावर्तयदथान्तिके।
गोविन्दः शङ्करः शिष्याः शीतबाधां तयाऽत्यजन्॥ २५॥

अथ शम्भुः अन्तिके तप्तोदलहरीं प्रावर्तयत्। गोविन्दः शङ्करः शिष्यः (च) तया शीतबाधां अत्यजन्।

*அதனையடுத்து சிவன் அருகில் வெந்நீர் ஊற்றைப் பெருகச் செய்தார். அதனுல் கோவிந்தரும் சங்கரரும் சீடர்களும் குளிர்வாட்டலை அகற்றினர்.*

कदाचिच्छङ्करं स्वप्ने जगाद हरिरच्युतः।
मूर्तिर्मदीया गङ्गायां मग्नाऽस्त्युद्धर तां यते॥ २६॥
पूजयस्वेति तस्योक्तिमाकर्ण्य च तथाऽकरोत्।

कदाचित् अच्युतः हरिः शङ्करं स्वप्ने जगाद – "यते! मदीया मूर्तिः गङ्गायां मग्ना अस्ति। तां उद्धर। पूजयस्व" इति। तस्य उक्तिं आकर्ण्य च तथा शङ्करः अकरोत्।

*ஒருநாள் (தன்னை அண்டியவர்களை) நழுவவிடாத ஹரி சங்கரரைக் கனவில் கூறினுர் – "எனது விக்ரஹம் கங்கையில் மூழ்கிக் கிடக்கிறது. அதனை வெளியே எடு. வழிபடச் செய்" என. அவரின் சொல்லைக் கேட்டு அப்படியே செய்தார்.*

तस्यालयं कारयितुं चिन्तयन्नथ शंकरः ।

मात्रा प्रेषितमद्राक्षीदग्निशर्माभिधं द्विजम् ।। २७ ।।

अथ तस्य आलयं कारयितुं चिन्तयन् शङ्करः मात्रा प्रेषितं अग्निशर्माभिधं द्विजं अद्राक्षीत् ।

*பிறகு அந்த ஹரிக்குக் கோயிலைச் செய்விக்கச் சிந்தித்துக் கொண்டிருந்த சங்கரர் (தனது) தாயால் அனுப்பப்பெற்ற அக்னி சர்மா என்ற அந்தணரைக் கண்டார்.*

आर्याऽम्बा जरया जीर्णा त्वां स्मरन्त्यनिशं कृशा ।। २८ ।।

दिदृक्षते त्वां तद्दत्तं प्रतीच्छैतन्महद्वसु ।

इत्थं निवेदयन्सद्यः पपात गुरुपादयोः ।। २९ ।।

अम्बा आर्या जरया जीर्णा अनिशं त्वां स्मरन्ती कृशा त्वां दिदृक्षते । तद्दत्तं एतत् महत् वसु प्रतीच्छ ।'' इत्थं निवेदयन् सद्यः गुरुपादयोः पपात ।

*''அன்னை ஆரியை முதுமையால் தளர்ந்தவளாக எப்போதும் உம்மை நினைப்பவளாக உடல் மெலிந்தவளாக உம்மைப் பார்க்க விரும்புகிறாள். அவளால் அளிக்கப்பெற்ற இந்தப்பெரும் நிதியை ஏற்பீர்.'' இவ்வாறு விண்ணப்பித்துக் கொள்பவராக உடன் குருவின் திருவடிகளில் விழுந்தார்.*

शङ्करः कारयामास तद्धनेनालयं हरेः ।

न्ययुंक्त चाग्निशर्माणं नियतं पूजने हरेः ।। ३० ।।

शङ्करः तद्धनेन हरेः आलयं कारयामास । नियतं अग्निशर्माणं हरेः पूजने न्ययुंक्त च ।

*சங்கரர் அந்தப் பொருள் குவியலைக்கொண்டு ஹரிக்குக் கோயிலைக் கட்டுவித்தார். மிகவும் அடக்கமுள்ள அக்னிசர் மாவை ஹரியின் வழிபாட்டில் ஈடுபடுத்தினார்.*

पद्मपादं समादिश्य विस्तारयितुमालयम् ।

स्मृतो मात्रा ततः प्रागात्कालटीं गगनाध्वना ।। ३१ ।।

आलयं विस्तारयितुं पद्मपादं समादिश्य मात्रा स्मृतः ततः गगनाध्वना कालटीं प्रागात्।

*ஆலயத்தை விரிவு படுத்துவதற்குப் பத்மபாதரைக் கட்டளை இட்டுத் தாயால் நினைக்கப்பெற்றவராக அங்கிருந்து (பதரிகாசிரமத்திலிருந்து) வானவழியே காலடியை அடைந்தார்.*

ननाम मातरं तस्यास्तापं जह्रे समागमात्।

उपादिशद्ब्रह्म तस्यै परमं यन्न साऽविदत्॥ ३२॥

मातरं ननाम। समागमात् तस्याः तापं जह्रे। तस्यै परमं ब्रह्म उपादिशत्। यत् सा न अविदत्।

*தாயை வணங்கினார். (தான்) வந்து சேர்ந்ததனால் அவளது தாபத்தைப் போக்கினார். பரம்பொருளைப்பற்றி உபதேசித்தார். (எந்த) அதனை அவள் உணரவில்லை.*

अन्त्यकालस्मृतिं तस्याः शिवविष्ण्वभिधेऽपरे।

ब्रह्मणि व्यदधाद्धीरः स्थिरां स्तोत्रैर्मनोहरैः॥ ३३॥

धीरः (शङ्करः) शिवविष्ण्वभिधे अपरे ब्रह्मणि तस्याः अन्त्यकालस्मृतिं मनोहरैः स्तोत्रैः स्थिरां व्यदधात्।

*அறிவைத் தூண்டுபவரான சங்கரர், சிவன் விஷ்ணு என்ற பெயருள்ள ஸகுணமான பரம்பொருள் வடிவில் அவளது கடைசி நேரத்தின் நினைவை மனத்தைக் கவரும் ஸ்தோத்திரங்களால் நிலைத்துப் பதியும்படி செய்தார்.*

पश्यन्ती सगुणं ब्रह्म सद्यस्तद्रूपमापिता।

योगिगम्यं पदं प्राप माता यतिवरस्य सा॥ ३४॥

यतिवरस्य माता सा सगुणं ब्रह्म पश्यन्ती सद्यः तद्रूपं आपिता, योगिगम्यं पदं प्राप।

*துறவிகளுக்குள் உயர்ந்தவரின் தாயான அவள் ஸகுணமான பரம்பொருளின் வடிவை நன்கு உணர்ந்தவளாக உடன் அந்நிலையை*

*அடையப்பெற்றவளாக யோகிகளால் மட்டும் அடையத்தக்க பெருநிலையை அடைந்தாள்.*

**यथाप्रतिश्रुतं मातुरन्तिमेष्टिं विधाय सः ।**

**पुनश्च तीर्थानटितुं प्रयागं प्राप शङ्करः ॥ ३५ ॥**

**सः शङ्करः यथाप्रतिश्रुतं मातुः अन्तिमेष्टिं विधाय, पुनश्च तीर्थानटितुं प्रयागं प्राप ।**

*அந்த சங்கரர் உறுதிமொழி தந்ததற்கேற்ப தாயின் ஈமக் கடனைச் செய்து பின்னர் புண்ய தீர்த்தங்களைச் சுற்றிவருவதற்காக பிரயாகையை அடைந்தார்.*

**कलिन्दजह्नुसुतयोः सरस्वत्याश्च सङ्गमे ।**

**सस्नौ स ब्रह्मयजनस्थले तां जननीं स्मरन् ॥ ३६ ॥**

**कलिन्दजह्नुसुतयोः सरस्वत्याश्च सङ्गमे ब्रह्मयजनस्थले सः तां जननीं स्मरन् सस्नौ ।**

*கலிந்தனின் குமாரியான யமுனை, ஜந்ஹு மஹரிஷியின் குமாரியான கங்கை ஸரஸ்வதி இவற்றின் கூடலில் பிரும்மா வேள்விபுரிந்த இடத்தில் அவர் (மறைந்த) அந்த தாயை நினைத்துக்கொண்டவராக ஸ்னானம் செய்தார்.*

பயிற்சி : *ஸமாஸமடைந்தவற்றைப் பிரித்து விக்ரஹ வாக்யம் எழுதுக. பதம் பதமாகப் பொருள் தருக.*

## नवमः पाठः - பாடம் 9

## उपपदविभक्तयः (चतुर्थी विभक्तिः)

*1.* *ஒரு செயலின் பயனைக்குறிக்கும் சொல்லின் மீது 4ம் வேற்றுமை வரும்*

क) व्याधितः आरोग्याय सूर्यं नमति ।

ख) बहवः जीविकायै विदेशं गन्तुं इच्छन्ति ।

ग) मम पुत्रः अध्ययनाय पाठशालां गच्छति ।

व्याधितः *நோயாளி* जीविका *பிழைப்பு*

2. कल्पते (ஏற்றதாக உள்ளது) என்ற தாதுவை உபயோகப் படுத்தும் போது மூலப்பொருளைக் குறிக்கும் சொல் 4ம் வேற்று மையைத் தழுவும்.

क) इमानि बीजानि न सस्याय कल्पन्ते।

ख) एते तण्डुलाः ओदनाय कल्पन्ते।

ग) समीक्षा क्षेमाय कल्पते।

बीजं விதை सस्यं பயிர் ओदनं சாதம் समीक्षा ஆராய்ந்து முடிவு செய்தல்.

3. हितं (நன்மை) शुभं (மங்களம்) என்ற சொற்கள் உபயோகப் படும்போது அவற்றுடன் இணைந்த சொற்கள் 4ம் வேற்றுமையை ஏற்கும்.

क) पिता पुत्राय हितं चिन्तयति/उपदिशति।

ख) शुभं ते भूयात्। உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

ग) सीताप्रत्यर्पणमेव भ्रात्रे हितं इति विभीषणः अवदत्।

प्रत्यर्पणं திருப்பித் தருவது

4. नमः வணக்கம் स्वस्ति க்ஷேமம் स्वाहा ஹோமம் செய்யும்போது கூறும் மந்திரம். अलं சக்தி உடையவன் என்ற சொற்கள் உபயோகப்படும்போது அவற்றுடன் இணையும் சொற்கள் 4ம் வேற்றுமையைத் தழுவும்.

क) गुरवे नमः। शिवाय नमः।

ख) ऋषयः रामाय स्वस्ति अवदन्।

ग) कर्मणे स्वस्ति காரியம் நன்றாக முடியட்டும்.
I wish the function every success.

घ) स्थाली पाकाय नालम् பானை சமைப்பதற்குப் போதியதல்ல. (சக்தி உடையதல்ல.)

ङ) रामः राक्षसानां नाशाय अलम्।

च) अन्नं भोजनाय नालम्। உணவு சாப்பாட்டுக்குப் போதியதல்ல.

छ) वेतनं जीवनाय नालम्।

சம்பளம் வாழ்வதற்கு போதாது.

5. मन्यते (எண்ணுகிறான், கருதுகிறான்) அவமரியாதையைக் குறிக்க இவ்வினைச்சொல்லை உபயோகப்படுத்தும்போது மதிப்பிடப்படும் சொல்லின் மீது 4ம் வேற்றுமை வரும்.

क) सीता रावणं तृणाय अमन्यत।

ख) अहं त्वां मशकाय मन्ये।

ग) दुर्योधनः पाण्डवान् तूलायापि न अमन्यत।

तृणं புல் मशकः கொசு तूलं பஞ்சு.

6. तुमुन् अन्त அவ்யயங்களை (Infinitive) வினைப்பெயர்களாக (Gerund) உபயோகப்படுத்தும்போது வினைப்பெயர்களின் மீது 4ம் வேற்றுமை வரும்.

क) सः स्नातुं नदीं याति। सः स्नानाय नदीं याति।

ख) अहं पठितुं आगच्छामि। अहं पठनाय/पाठाय आगच्छामि

ग) त्वं भोक्तुं उपविश। त्वं भोजनाय उपविश।

7. ஒரு செயலுக்காக நடைபெறும் வேறு செயலின் செயப்படு பொருளைக் குறிக்கும் சொல்லின் மீது 4ம் வேற்றுமை வரும்.

क) फलेभ्यः याति பழங்களுக்காகப் போகிறான். பழங்களைக் கொண்டுவரச் செல்கிறான். செல்கிறான் என்ற செயல், கொண்டு வருவதற்காக என்ற செயலுக்காக நடைபெறுகிறது. கொண்டுவர என்ற செயலின் செயப்படுபொருள் பழங்கள். அதன் மேல் 4ம் வேற்றுமை வருகிறது. फलानि आहर्तुं याति।

ख) जनकः दशरथाय दूतं प्राहिणोत्। दशरथाय தசரதனை அழைத்து வருவதற்கு दशरथं आनेतुं।

ग) भोजनाय सामग्रीं संपादयामि । *சாப்பாடு தயாரிக்க சாமான்களை சேகரிக்கிறேன். (முதல்வகை உதாரணத்துக்கும் இதற்கும் மிக நுண்ணிய வித்யாசமுண்டு)*

## दशमः पाठः - பாடம் 10

## अर्थकरी वृत्तिः

द्वौ गच्छतः । एकः वृद्धः बहुश्रुतः दृष्टकर्मा कर्मण्यश्च । युवा अन्यः इदानीमेव कस्याञ्चन अर्थकर्यां वृत्तौ प्रवृत्तः । उभौ संभाषेते ।

– आर्य ! अचिरादेव अर्थकरी वृत्तिः प्राप्ता । तत्र आयो यथा वर्धेत उपायं उपदिशतु भवान् ।

– इदं प्रथमतो वेद्यम् । व्ययं विना आयो न जायते । आयं विना व्ययः न कर्तुं शक्यते । उभयोः यथावत् तुलनं आवश्यकम् । अस्मिन् कर्मणि इयान् व्ययः नितरां अपेक्ष्यते, इयान् आयः प्रतीक्ष्यते इति निर्धारणं आवश्यकम् । आयवर्धनसमये, बहुशाखा प्रवृत्तिरपि चिन्तनीया, यथा निर्धारितः आयः एव उपायं (उप आयं) अपि कणशः संपादयेत् ।

– आर्य ! अहं गणिते वाणिज्ये आयव्ययनिरीक्षणे च शिक्षां प्राप्तवान् । अतः वृत्तेः निर्वहणे श्रमो न स्यात् इति मे मतिः ।

– श्रमो न स्यात् । विद्या युक्तिः अनुभवः इति त्रीणि कर्मणः सिद्धिं यच्छन्ति । बुद्धिमतः एतानि त्रीणि सुलभानि । बुद्धिः द्विविधा । सहजा वैनयिकी इति । सहजा सा - या जन्मतः सिद्धा । वैनयिकी सा-या विद्याशालासु गुरुभ्यः ग्रन्थाध्ययन मुखेन प्राप्ता । सहजा तु चक्षुरिव । वैनयिकीतु आलोकः इव । चक्षुः दर्शनाय आलोकं अपेक्षते । परं, चक्षुः विना आलोकः न किमपि दर्शयति ।

– ईषत् विवृणोत्वार्यः ।

– विवृणोमि एतत् । अस्माकं प्रकृत्या जन्मतः सिद्धा बुद्धिः अस्ति । सा आन्तरं चक्षुः । तयैव विद्यामपि गृह्णीमः । विद्यया बहु जानीमः । तया

सहजां बुद्धिं उपबृंहयामः। सहजया बुद्ध्या योजिता विद्या बलवती भवति।

– आर्य ! यस्य सहजा बुद्धिः नास्ति, तस्य विद्यया लाभो न भवेद्वा?

– अये ! सर्वस्यापि सहजा बुद्धिः अस्त्येव। अतः अबुद्धिः कोऽपि नास्ति। सा कुण्ठा तीक्ष्णा वा? इदमेव ज्ञेयम्। कुण्ठा बुद्धिः विद्यया शिता भवति। अथवा बहुधा श्रुतेन बुद्धिः शिता भवति। शिता बुद्धिः कर्तव्ये युक्तिं निर्दिशति। युक्तिर्नाम कर्तव्यमधिकृत्य पूर्वमेव मनसा फलप्राप्तिं यावत् क्रमनिर्धारणम्। युक्तिः कालं देशं वस्तु चानुसृत्य तदा तदा भिद्यते। बहुधा बहुषु कार्येषु विविच्य निर्णीतया युक्त्या करणे अनुभवः जायते। सः अनुभवः पश्चात् युक्तीनां विविधानां निर्देशनं करोति।

– अनुभवो नाम कथं प्राप्यते ?

– अनुभवो नाग बहुधा बहुभिः युक्तिभिः कृतानि कार्याणि अनुगता, मनसि इदमित्थमिति तदा तदा स्फूर्तिं ददती काचन वासना।

– आर्य ! सर्वत्रापि एषा चिन्ता घटते। महानुपकारः कृतः। धन्योऽस्मि। पुनर्मिलामि यदा विचिकित्सा भवति।

(बहुश्रुतः கல்வியறிவுமிக்கவர், दृष्टकर्मा செயலனுபவமுள்ளவர். कर्मण्यः செயலாற்றல் மிக்கவர். अर्थकरी वृत्तिः வருவாயுள்ள தொழில், आयः வரவு, व्ययः செலவு. उपायः உபாயம் उप-आयः துணைவருமானம். निरीक्षणं மேற்பார்வை. प्रकृतिः இயல்பு उपबृंहयामः புஷ்டிசெய்கிறோம். कुण्ठा மழுங்கியுள்ள शिता கூர்மையுள்ள क्रमनिर्धारणं வரிசையமைப்பு, வரை முறைப்படுத்துதல் निर्देशनं இது தான் எனக் குறியிட்டுக் காட்டுவது. स्फूर्तिः உணர்வுத்துடிப்பு, உவகை. विचिकित्सा விளக்கம் பெற அவா.

பயிற்சி : ஸந்தி சேர்த்ததைப் பிரித்தும் சேராததைச் சேர்த்தும் எழுதுக. ஸமாஸமடைந்தவற்றிற்கு விக்ரஹவாக்யம் தருக. பதம் பதமாகப் பொருள் எழுதுக.

## एकादशः पाठः - பாடம் 11

## शङ्करोदन्तः

## द्वितीयो भागः (३)

अत्रान्तरे सुधन्वाख्यः सौराष्ट्रो वैदिकात्पथः ।
च्युतः प्रविष्टः समयं जैनं राष्ट्रमशान्नृपः ॥ १ ॥

अत्रान्तरे सुधन्वाख्यः सौराष्ट्रः नृपः वैदिकात् पथः च्युतः, जैनं समयं प्रविष्टः राष्ट्रं अशात्।

*இதனிடையில் ஸுதன்வா என்ற பெயருள்ள ஸௌராஷ்டிர தேசத்து அரசன் வைதிக நெறியிலிருந்தும் வழுவியவனாக ஜினரின் வழியைப் பின்பற்றியவனாக ராஜ்யத்தை ஆண்டான்.*

कुमारिलो विप्रवरो जैनान्विप्रद्विषः सुधीः ।
जिगीषुस्तन्मतं बोद्धुं वर्धमानं जिनं श्रयन् ॥ २ ॥
जैनवेषेण सिद्धान्तं छन्नः सम्यगधीतवान् ।

सुधीः विप्रवरः कुमारिलः, विप्रद्विषः जैनान् जिगीषुः तन्मतं बोद्धुं, जिनं वर्धमानं जैनवेषेण छन्नः श्रयन्, सिद्धान्तं सम्यक् अधीतवान्।

*நல்ல அறிவாளியும் அந்தணர்களுக்குள் சிறந்தவருமான குமாரிலர் அந்தணர்களை வெறுக்கின்ற ஜைனர்களை வெல்ல விருப்பம் கொண்டவராக, அவர்களது (ஜைனர்களது) கொள்கையை அறிவதற்காக, ஜினமதத்தைச் சார்ந்தவரான வர்த்தமானரை ஜைனரின் வேடத்தில் மறைந்தவராக அண்டி, கொள்கை முடிவுகளை நன்கு கற்றார்.*

ज्ञातरन्ध्रैर्जिनैः क्रुद्धैः पातितस्तुङ्गसौधतः ॥ ३ ॥
यदि वेदाः प्रमाणं स्युरक्षतः स्यां पतन्नधः ।
इति गायन्पपातास्य चक्षुरेकं परिक्षतम् ॥ ४ ॥

ज्ञातरन्ध्रैः (अत एव) क्रुद्धैः जिनैः तुङ्गसौधतः पातितः "यदि वेदाः प्रमाणं स्युः, अधः पतन् (अहं) अक्षतः स्यां इति गायन् पपात। अस्य एकं चक्षुः परिक्षतम्।

*அவரது ஊடுருவலே அறிந்து கோபமடைந்த ஜினர்களால் உயர்ந்த உப்பரிகையிலிருந்து தள்ளப்பட்டவராக, வேதங்கள் பிரமாணமாயின் கீழே விழுகின்ற நான் சிதைவடையாதவனுக ஆவேன் என்று கூவிக்கொண்டே விழுந்தார். இவரது ஒரு கண் சிதைவுற்றது.*

यदि प्रमाणमित्येवं संशयान्मे तथाऽभवत्।
इति संस्तंभयंश्चेतो निरगान्नीरुजस्ततः ॥ ५ ॥

'यदि प्रमाणं' इति एवं संशयात् मे तथा अभवत्। इति चेतः संस्तंभयन् नीरुजः ततः निरगात्।

*'பிரமாணம் ஆயின்' என்றிவ்வாறு சந்தேகத்தால் எனக்கு அவ்வாறு நேர்ந்தது என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டவராக வேதனையற்றவராக அங்கிருந்து வெளிப்பட்டார்.*

जित्वा जैनान्विवादेषु विदुषा नृपसंसदि।
स्थापितः कर्ममार्गश्च श्रौतः स्थिरतरो यथा ॥ ६ ॥

विदुषा (तेन) नृपसंसदि विवादेषु जैनान् जित्वा श्रौतः कर्ममार्गः स्थिरो यथा (तथा) स्थापितश्च।

*அறிவாளியான அவரால் அரசசபையில் வாதங்களில் ஜைனர்களே வென்று வேதத்தைச் சார்ந்த கர்மநெறி ஸ்திரமாக இருக்குமாறு நிலேக்கச் செய்யப்பெற்றது.*

एकाक्षरोपदेष्टापि गुरुर्जैनः स्वशास्त्रदः।
तस्मै द्रुह्यन्नकरवं पापं तस्य न निष्कृतिः ॥ ७ ॥
इति लोकहितं कृत्वाऽप्यशान्तं तस्य मानसम्।
तुषानलप्रवेशः स्यान्निष्कृतिस्त्वित्यचिन्तयत् ॥ ८ ॥

एकाक्षरोपदेष्टा अपि गुरुः। जैनः स्वशास्त्रदः। तस्मै द्रुह्यन् पापं अकरवम्। तस्य निष्कृतिः न (अस्ति)। इति लोकहितं कृत्वापि अशान्तं तस्य मानसं तुषानलप्रवेशस्तु निष्कृतिः स्यात् इति अचिन्तयत्।

ஓர் எழுத்தை உபதேசித்தவன் குரு. ஜைனரோ தன் சாஸ்திரத்தின் தத்துவத்தையே உபதேசித்தவர். அவருக்கு துரோகம் விளைவித்த நான் பாபம் செய்தேன். இதற்குக் கழுவாய் இல்லை என்று உலகிற்கு நன்மை புரிந்த பிறகும் அமைதியுறாத அவரது மனம் உமிக்காந்தலில் ஆழ்ந்திருப்பதே கழுவாயாகும் என்று எண்ணிற்று.

श्रौतसन्मार्गरक्षार्थं गुहांशेन कुमारिलः ।
जातः स्वदुष्कृतं मार्ष्टुं प्रायश्चित्तं स्वयं व्यधात् ॥ ९ ॥

श्रौतसन्मार्गरक्षार्थं गुहांशेन जातः कुमारिलः स्वदुष्कृतं मार्ष्टुं स्वयं प्रायश्चित्तं व्यधात् ।

வேதம் கூறும் நல்வழியை காப்பாற்றுவதற்கென்றே குகப் பெருமானின் அம்சமாகப் பிறந்த குமாரிலர் தன் தீவினையைப் போக்கத் தானே கழுவாய் செய்தார்.

सशिष्यः शङ्करो मन्दं दह्यमानं तुषाग्निना ।
धीरं कुमारलं प्राप तच्छिष्यैः साश्रुभिर्वृतम् ॥ १० ॥

सशिष्यः शङ्करः तुषाग्निना मन्दं दह्यमानं तच्छिष्यैः साश्रुभिर्वृतं धीरं कुमारिलं प्राप ।

சிஷ்யர்களுடன் கூடிய சங்கரர் உமிக்காந்தலால் மெல்லமெல்ல எரிந்துகொண்டிருக்கின்றவரும் கண்ணீர் வடிக்கும் தன் சீடர்களுடன் கூடியவரும் மனங்கலங்காதவருமான குமாரிலரை அடைந்தார்.

पुण्यैः पुरातनैरेव दृष्टस्त्वं भगवन्मया ।
शान्त्यै प्राक्चरिताघस्य प्राविक्षमनलं बुध ॥ ११ ॥
इत्यूचिवांसमाचार्यो भट्टमाह गुहांशजम् ।

भगवन् ! पुरातनैः पुण्यैरेव मया त्वं दृष्टः । बुध ! प्राक् चरिताघस्य शान्त्यै अनलं प्राविक्षम् । इति ऊचिवांसं गुहांशजं भट्टं आचार्यः आह ।

''பகவானே ! பழைய நல்வினைப்பயனால் என்னால் நீர் காணப்பட்டீர். அறிவாளியே ! முன் செய்த தீ வினையின் சாந்திக்காக நெருப்பில் நுழைந்தேன்'' என்று கூறிவந்த குகப்பெருமானின் அம்சமாகத் தோன்றிய குமாரிலபட்டரைப் பார்த்து ஆசாரியர் கூறினார்.

व्रतं चरसि लोकस्य शिक्षायै नास्त्यघं त्वयि ॥ १२ ॥
त्वां जीवयामि मद्भाष्ये भव्यं रचय वार्तिकम्।
तमाह भट्ट आरब्धं व्रतं त्यक्तुं न पारये ॥ १३ ॥

"लोकस्य शिक्षायै व्रतं चरसि। त्वयि अघं नास्ति। त्वां जीवयामि। मद्भाष्ये भव्यं वार्तिकं रचय।" तं भट्टः आह – "आरब्धं व्रतं त्यक्तुं न पारये।

*'உலகத்தினரை வழிப்படுத்துவதற்காக கழுவாயைச் செய்கிறீர். உம்மிடம் தீவினை இல்லை. உம்மை உயிர்ப்பிக்கிறேன். எனது பாஷ்யத்தின்மேல் வார்த்திகம் என்ற குறிப்பை அமைப்பீராக.' அவரைப் பார்த்துப்பட்டர் சொன்னார், 'தொடங்கிய விரதத்தைக் கைவிட இயலாதவனாக இருக்கிறேன்' என.*

मगधेष्वस्ति शास्त्रज्ञो विश्वरूपो गृहाश्रमी।
मत्तोऽधिकः शास्त्रपथे प्रेष्ठः शिष्येषु याहि तम् ॥ १४ ॥

मगधेषु शास्त्रज्ञः गृहाश्रमी विश्वरूपः अस्ति। (सः) शास्त्रपथे मत्तः अधिकः, शिष्येषु प्रेष्ठः। तं याहि।

*மகததேசத்தில் சாஸ்திரம் நன்கறிந்தவரும் கிருஹஸ்தாசிரமத்தில் உள்ளவருமான விச்வரூபர் இருக்கிறார். அவர் சாஸ்திர வழியில் என்னைவிட மேம்பட்டவர், (எனது) சீடர்களுக்குள் மிகப் பிரியமானவர். அவரை அடைவீர்.*

विधेहि वशगं तेन वार्तिकं कारयाशु भोः।
उपदिश्या मुमूर्षोर्मे विश्वेश इव तारकम् ॥ १५ ॥

भोः, (तं) वशगं विधेहि। तेन आशु वार्तिकं कारय। मुमूर्षोर्मे विश्वेशः इव तारकं उपदिश्याः।

*அவரை வசத்தில் வந்தவனாக ஆக்கிக்கொள்வீர். இறக்கும் தருவாயிலுள்ள எனக்கு விச்வேசுவரர்போல் தாரக மந்திரத்தை (பிறவியிலிருந்து கரையேற்றும் மந்திரத்தை) உபதேசிப்பீர்.*

तथेति तस्मै स ब्रह्मोपादिशद्ब्रह्मतां गते।
तस्मिन्ययौ विश्वरूपं दिदृक्षुर्मगधान्प्रति ॥ १६ ॥

तथा (अस्तु) इति सः (शङ्करः) तस्मै ब्रह्म उपादिशत्। तस्मिन् ब्रह्मतां गते, विश्वरूपं दिदृक्षुः मगधान् प्रति ययौ।

*அப்படியே (ஆகட்டும்) என்று அவர் குமாரிலருக்கு பரம் பொருளைப்பற்றிய மந்திரத்தை உபதேசித்தார். அவர் பிரும்ம நிலையை அடைந்ததும் விசுவரூபரைக்காண விருப்பமுள்ளவராக மகததேசம் நோக்கிச் சென்றார்.*

अत्राहुर्ब्रह्मसदने दुर्वासा वेदमध्यगात्।
स्वरेऽस्खलत्स तं वाणी प्राहसद्ब्रह्मसंमता ॥ १७ ॥

अत्र आहुः। ब्रह्मसदने दुर्वासाः वेदं अध्यगात्। सः स्वरे अस्खलत्। तं वाणी ब्रह्मसम्मता (सती) प्राहसत्।

*இங்கு (இவ்வாறு) கூறுவார்கள். பிரும்மாவின் இருப்பிடத்தில் துர்வாஸர் வேதம் ஓதினார். அவர் ஸ்வரத்தில் பிழை செய்தார். அவரை ஸரஸ்வதி பிரும்மாவின் சம்மதி பெற்றவளாகப் பரிகசித்தாள்.*

शशाप तां मुनिः क्रुद्धो मानुषीभवितुं तदा।
प्रसादितो गिरां मात्रा शापमोक्षमुदैरयत् ॥ १८ ॥
शम्भोराचार्यवर्यस्य दर्शनात्सेवनादिति।

तदा क्रुद्धः मुनिः तां मानुषीभवितुं शशाप। गिरां देव्या प्रसादितः 'आचार्यवर्यस्य शंभोः दर्शनात् सेवनात्' इति शापमोक्षं उदैरयत्।

*அப்போது வெகுண்ட முனிவர் அவளை மனிதப்பெண்ணாகப் பிறக்கச் சபித்தார். வாக்கின் தேவியான அவளால் கோபத் தெளிவடையச் செய்யப்பட்டவராக 'ஆசாரியர்களில் சிறந்தவரான சங்கரரின் பார்வையாலும் அவரது ஸேவையாலும்' என்று சாபவிடுதலையைக் கூறினார்.*

जज्ञे वाणी भारतीति शोणातीरे द्विजात्मजा ॥ १९ ॥
ब्रह्मा जज्ञे हरादेशात् विश्वरूप इति द्विजः।
हिममित्रात्कान्यकुब्जेऽन्तेवसन्स कुमारिलात् ॥ २० ॥
श्रौतविद्यामधिजगे श्रौतकर्मरतोऽभवत्।

वाणी भारतीति द्विजात्मजा शोणातीरे जज्ञे। ब्रह्मा हरादेशात् कान्यकुब्जे हिममित्रात् विश्वरूप इति द्विजः जज्ञे। सः अन्तेवसन् कुमारिलात् श्रौतविद्यां अधिजगे। श्रौतकर्मरतः अभवत्।

*ஸரஸ்வதி சோண நதிக்கரையில் அந்தணப்பெண்ணக பாரதி என்ற பெயருடன் பிறந்தாள். பிரும்மா சிவபெருமானின் கட்டளையால் கான்யகுப்ஜத்தில் (கனௌஜ்) ஹிமமித்ரர் என்பவரிடமிருந்து விசுவரூபர் என்ற பெயருடன் அந்தணராகப் பிறந்தார். அவர் மாணவராகிக் குருவை அண்டியிருப்பவராக குமாரிலரிடமிருந்து வேத நெறியைக் கற்றார். வேத நெறிப்படிச் சடங்குகளைச் செய்வதில் ஈடுபட்டவராக ஆனார்.*

तयोर्विवाहः समभूत् शीलविद्यानुरूपयोः ॥ २१ ॥

तौ द्रष्टुं शङ्करः प्रागात्पुरीं माहिष्मतीं प्रति।

शील विद्यानुरूपयोः तयोः विवाहः समभूत्। शङ्करः तौ द्रष्टुं माहिष्मतीं पुरीं प्रति प्रागात्।

*நடத்தையிலும் கல்வியிலும் இணையானவர்களான அவர்களிருவருக்கும் விவாஹம் நடந்தது. சங்கரர் அவர்களைக்காண மாஹிஷ்மதி நகரை நோக்கிச் சென்றார்.*

पञ्जरेष्वभितो बद्धैः वेदपाठनतत्परैः ॥ २२ ॥

कृतशास्त्रप्रसंगैश्च कीरैः सन्नादिताङ्गणे।

महति श्रीमति गृहे पाठशालाशतान्विते ॥ २३ ॥

प्रतीक्षमाणमतिथीन् विश्वरूपं ददर्श सः।

अभितः पञ्जरेषु बद्धैः वेदपाठनतत्परैः कृतशास्त्रप्रसंगैश्च कीरैः सन्नादिताङ्गणे पाठशालाशतान्विते महति श्रीमति गृहे अतिथीन् प्रतीक्षमाणं विश्वरूपं सः ददर्श।

*ஆங்காங்கு கூடுகளில் சிறையிடப்பட்டவையும் வேதம் ஓதுவிப்பதில் ஈடுபட்டவையும் சாஸ்திரங்களில் விரிவுரை நிகழ்த்துபவையுமான கிளிகளால் ஒலிமயமாக்கப்பெற்ற தாழ்வாரத்துடன் கூடியதும் நூற்றுக்கணக்கான வகுப்பறைகள்*

கொண்டதுமான பெரிய அழகான வீட்டில் விருந்தாளிகளை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற விசுவரூபரை அவர் கண்டார்.

भिक्षवेऽदृष्टपूर्वाय भिक्षां समुपकल्प्य सः ॥ २४ ॥

हस्ते यतेरदान्नीरं नाददे यतिरर्पितम् ।

तेनोद्विग्नं विश्वरूपं यतिराह महामतिः ॥ २५ ॥

सः अदृष्टपूर्वाय भिक्षवे भिक्षां समुपकल्प्य यतेः हस्ते नीरमदात् । अर्पितं यतिः न आददे । तेन उद्विग्नं विश्वरूपं महामतिः यतिः आह ।

அந்த விசுவரூபர் முன் பார்த்தறியாத அந்த துறவிக்குப் பிக்ஷையுணவை ஏற்பாடு செய்துவிட்டு, துறவியின் கையில் (உணவு ஏற்கக் கோரி) நீர் வார்த்தார். வார்த்ததை துறவி ஏற்கவில்லை, அதனால் கலங்கிய விசுவரூபரைப் பேரறிவாளியான துறவி கூறினார்.

यदि दद्या वादभिक्षां स्वीकुर्यां भोज्यमर्पितम् ।

विप्रस्तमाह कुतुकी को मध्यस्थश्च कः पणः ॥ २६ ॥

"यदि वादभिक्षां दद्याः अर्पितं भोज्यं आदद्याम्" । कुतुकी विप्रः तं आह - कः मध्यस्थः, कः पणश्च इति ।

'நீர் வாதமாகிய பிக்ஷையை அளிப்பீரேயாகில் நான் அளிக்கப் பெற்ற உணவை ஏற்பேன்' என. (அதனைக் கேட்டு வாதிடுவதில்) ஆவல் கொண்ட அந்தணர் அவரை நோக்கிக் கூறினார். "யார் (வாதில்) நடுவலர்? என்ன பந்தயம்?" என.

जैत्राश्रमाभ्युपगमः पणो मध्ये च भारती ।

इत्याह शङ्करस्तच्च संमेने विप्रपुङ्गवः ॥ २७ ॥

जैत्राश्रमाभ्युपगमः पणः । मध्ये भारती च । इति शंकरः आह । तच्च विप्रपुङ्गवः संमेने ।

வெற்றி கொண்டவரின் ஆசிரமத்தை ஏற்பது பந்தயமாகும். நடுவில் (நடுவராக) பாரதீ என்று சங்கரர் கூறினார். அதனை அந்தணப் பெரியார் ஏற்றார்.

चक्रतुर्भोजने वृत्ते उभौ सुमनसौ कथाम्।
इतो यतिस्ततो भर्ता न स्यां पक्षान्तराश्रिता॥ २८॥
इति साक्ष्ये वृता वाणी सुममाले ददौ तयोः।

भोजने वृत्ते उभौ सुमनसौ कथां चक्रतुः। साक्ष्ये वृता वाणी, इतः यतिः, ततः भर्ता, पक्षान्तराश्रिता न स्यां, इति तयोः सुममाले ददौ।

சாப்பாடு முடிந்ததும் இருவரும் நன்மனம் கொண்டவர்களாக வாதைச் செய்தனர். சாக்ஷியாக இருப்பதில் வரிக்கப்பெற்ற பாரதி, இப்புறம் துறவி, அப்புறம் கணவர், ஏதேனும் ஒரு கட்சியைத் தழுவியவளாக (நான்) ஆகக்கூடாதென அந்த இருவருக்கும் இரு பூமாலைகளைத் தந்தாள்.

माला येन धृता म्लायेन्मन्तव्यः स पराजितः॥ २९॥
इति कृत्वा निश्चयं सा गृहकृत्ये रताऽभवत्।

येन धृता माला म्लायेत् स पराजितः मन्तव्यः। इति निश्चयं कृत्वा सा गृहकृत्ये रता अभवत्।

எவரால் சூடப்பெற்ற மாலை வாடுகிறதோ அவர் தோற்றவராகக் கருதப்படுவார் என முடிவைச் செய்துவிட்டு அவள் வீட்டுப் பணிகளில் ஈடுபட்டவளாக ஆனாள்.

षड्दिनानि व्यतीतानि तयोर्विवदमानयोः॥ ३०॥
सस्मिताननपद्मौ तौ प्रगल्भौ प्रतिभान्वितौ।
उत्तरोत्तरयुक्तीनामभूतां खण्डने पटू॥ ३१॥

तयोः विवदमानयोः षट् दिनानि व्यतीतानि। तौ प्रगल्भौ। प्रतिभान्वितौ। सस्मिताननपद्मौ उत्तरोत्तरयुक्तीनां खण्डने पटू अभूताम्।

அவர்கள் இருவரும் வாதிட்டுவரும்போது ஆறு நாட்கள் கழிந்தன. இருவரும் திறமையுள்ளவர்கள். புத்திக் கூர்மையுள்ளவர்கள். புன்சிரிப்புடன் கூடிய தாமரைபோன்று அழகிய முகமுள்ளவர்களாக அவர்களிருவரும் மேல்மேல் எழும் யுக்திகளைக் கண்டிப்பதில் திறமையுள்ளவர்களாக இருந்தார்கள்.

न भीश्चिन्ताऽथवा रोषो न वागुग्रा तयोरभूत्।
सप्तमे दिवसे विप्रो यत्युक्तीनां निबर्हणे ॥ ३२ ॥
स्वोक्तेः समर्थने वापि नाशक्नोद्यत्नवानपि।

तयोः भीतिः चिन्ता अथवा रोषः न अभूत्। न वाक् उग्रा अभूत्। सप्तमे दिवसे विप्रः यत्युक्तीनां निबर्हणे स्वोक्तेः समर्थने वापि यत्नवानपि न अशक्नोत्।

*அவர்களுக்குப் பயமோ கவலையோ ஆத்திரமோ ஏற்பட வில்லை. கடும் சொல் கூட இல்லை. ஏழாவது நாள் அந்தணர் (விச்வரூபர்) துறவியின் வாதங்களைக் கண்டிக்கவோ தன் வாதத்தை நிலைநிறுத்தவோ முயன்றும் இயலாதவரானார்.*

भर्तुर्गलगतां मालां म्लायन्तीं वीक्ष्य भारती ॥ ३३ ॥
न्यमन्त्रयदुभे भैक्ष्ये जानाना स्वपतिं जितम्।
दुर्वासश्शापतो मुक्ता ततो भेजे स्वकं वपुः ॥ ३४ ॥

भारती भर्तुः गलगतां मालां म्लायन्तीं वीक्ष्य स्वपतिं जितं जानाना उभे भैक्ष्ये न्यमन्त्रयत्। ततः दुर्वासश्शापतो मुक्ता स्वकं वपुः भेजे।

*பாரதி கணவரின் கழுத்திலிருந்த மாலை வாடிவருவதைக் கண்டு தன் கணவரைத் தோற்றவராக உணர்ந்து இருவரையும் பிக்ஷை ஏற்கக் கூப்பிட்டாள். (தோற்ற தன் கணவர் துறவியாக வேண்டியிருப்பதால் இனி இல்லறத்துரிமை இழந்தார் என்பதை உணர்ந்தாள்) பின்னர் துர்வாஸரின் சாபத்திலிருந்தும் விடுபட்ட வளாகத் தன் (ஸரஸ்வதி) வடிவைப் பெற்றாள்.*

तां प्रणम्य यतीशानः प्रार्थयामास भारतीम्।
स्थानेषु स्मर्यमाणा त्वं आविरास्व शुभैषिणी ॥ ३५ ॥

यतीशानः तां भारतीं प्रणम्य त्वं स्थानेषु स्मर्यमाणा शुभैषिणी आविरास्व (इति) प्रार्थयामास।

*துறவித் தலைவர் அவளை வணங்கி "தாங்கள் ஆங்காங்கு இடங்களில் நினைக்கப்பட்டதும் உலக நன்மையைச் செய்ய விரும்புபவளாகத் தோன்ற வேண்டும்" எனக் கோரினார்.*

तथेति संश्रुतवती ययौ वाणी स्वकं पदम्।

तथा इति संश्रुतवती वाणी स्वकं पदं ययौ ॥

*அவ்வாறே (ஆகட்டும்) என்று உறுதி கூறியவளாகப் பாரதி தன் நிலையை அடைந்தாள்.*

सदाचार वयो विद्याऽऽभिजात्यादि विजृम्भिते ॥ ३६ ॥

अहन्ताममते त्यक्त्वा विप्रः शङ्करमाश्रयत्।

विप्रः सदाचार - वयो - विद्या - आभिजात्य - आदि - विजृम्भिते अहन्ताममते त्यक्त्वा शङ्करं आश्रयत्।

*அந்தணர் (விச்வரூபர்) நன்னடத்தை, வயது, கல்வி, நற்குலத்தோன்றல் முதலியவற்றால் திமிர்த்திருந்த அஹங்காரத்தையும் மமகாரத்தையும் (தான் தனது என்ற எண்ணப்பற்றைத்) துறந்து சங்கரரை அண்டினார்.*

"तपो बह्वचरं पूर्वमद्य लब्धं हि तत्फलम् ॥ ३७ ॥

अन्यथा जगदीशेन स्वीकृतिर्मे घटेत किम्।

वृणोमि शरणं ब्रह्मन् त्वत्पादावनुशाधि माम् ॥ ३८ ॥

पूर्वं बहु तपः (अहं) अचरम्। अद्य हि तत्फलं लब्धम्। अन्यथा जगदीशेन मे स्वीकृतिः किं घटेत? ब्रह्मन् ! त्वत्पादौ शरणं वृणोमि। मां अनुशाधि।

*முன்பு (முன் பிறவியில்) பெரும் தவம் செய்துள்ளேன். இன்றல்லவோ அதன் பயன் கிட்டியது. இல்லாவிடில் உலகத்து ஈசனான உம்மால் எனது ஏற்பு கூடியிருக்குமா? உமது திருவடிகளைச் சரணமாகக் கோரியுள்ளேன். என்னை ஆண்டருள்க.*

इत्यर्थितोऽदीक्षयत्तं संन्यासेन यतीश्वरः।

सुरेश्वर इति ख्यातः स बभूव धरातले ॥ ३९ ॥

इति अर्थितः यतीश्वरः तं (विश्वरूपं) संन्यासेन अदीक्षयत्। सः (विश्वरूपः) सुरेश्वरः इति धरातले ख्यातः बभूव।

இவ்வாறு கோரப்பட்ட துறவித் தலைவர் அவரை ஸன்யாஸ முறைப்படி தீக்ஷை செய்வித்தார். அவர் (விசுவரூபர்) ஸுரேச்வரர் எனப் பூமியில் புகழ்பெற்றவர் ஆனார்.

பயிற்சி : ஸந்திசேர்ந்தவற்றைப் பிரித்தும் சேராததைச் சேர்த்தும் எழுதி ஸந்தியின் பெயர் குறிப்பிடுக. ஸமாஸமடைந்த வற்றைப் பிரித்து விக்ரஹவாக்யம் எழுதி, ஸமாஸத்தின் பெயர் குறிப்பிடுக.

## द्वादशः पाठः - பாடம் 12

## सूक्तिमाला

परिहरणादंहसां सुखं भवति।

*செய்த தவறுக்குப் பரிகாரம் செய்வதால் சுகம் ஏற்படும்.*

भृत्या जीवति विपद्यहो श्रीमान्।

*செல்வந்தனும் ஆபத்தில் கூலியால் பிழைப்பான்.*

जात्यनुगुणमेव चेष्टते जन्तुः।

*பிறவிக்கு ஒத்தவாறே எந்த பிராணியும் செயல்படும்.*

भवितव्यं केन वा निवार्येत।

*நேரவேண்டியதை எவரால் தடுக்க முடியும்.*

मालिन्यं व्रजति धीः भृशौत्सुक्यात्।

*எக்களிப்பு மிகுதியால் புத்தி மழுங்கலுறும்*

शीर्षे नवनीतमर्पयति बकहृत्।

*கொக்கு பிடிப்பவன் தலையில் வெண்ணையை வைக்கிறான்.*

दिश्याच्छौर्यं महान्महत्येव।

*மேலானவன் மேலானவனிடத்திலேயே தனது சூரத் தன்மையைக் காட்டுகிறான்.*

अनवाप्ता चेच्छिखांघ्रिमादत्ते।

*குடுமி கிடைக்காவிடில் காலைப்பிடிப்பான்.*

द्रोग्धुः परतो भयं ध्रुवं भवति।

*துரோகம் புரிபவனுக்குப் பிறரிடமிருந்து (மறுமை யிலிருந்து) பயம் நிச்சயம் உண்டு.*

न खलः सहते परोत्कर्षम्।

*போக்கிரி பிறரது உயர்வைப் பொறுக்கமாட்டான்.*

रक्ष्यं हि स्यात्स्वगौरवं सर्वैः।

*எல்லோராலும் தன் மதிப்பு பாதுகாக்கப்பெறவேண்டியதே.*

मृदुलैव मही जनैर्निखन्येत।

*மென்மையுள்ள பூமியே மக்களால் தோண்டப்பெறும்.*

न तरक्षोः स्ववनमपरवनमिति वा।

*சிறுத்தைக்குத் தன் காடு எதிரியின் காடு என்பதில்லை.*

भवति फलमप्रतीक्षितं खलूद्यमिनाम्।

*முயற்சியுள்ளவர்க்கு எதிர்பாராதபடி செயல் நிறைவு ஏற்படும்.*

यत्र न नाथस्तदेति भवनं श्वा।

*நாதனற்ற வீட்டில் நாய் நுழையும்.*

को नु दुरात्मा स्वदुष्कृतं वेत्ति।

*கெட்டவன் எவன் தன் தவற்றை உணர்கிறான்?*

तथ्योक्त्या स्थैर्यमेति विश्वासः।

*உண்மை கூறுவதால் நம்பிக்கை வலிவுறும்.*

तिष्ठति दर्शः किमग्रजागर्ति यावत्।

*அண்ணன் வரும் வரை அமாவாசை நிற்குமா?*

*பயிற்சி : இந்தப்பழமொழிகளில் ஏதேனும் இரண்டைக் கருத்தில் கொண்டு 20 வரிகளில் கட்டுரை எழுதவும்.*

## त्रयोदशः पाठः - பாடம் 13

## शङ्करोदन्तः

### द्वितीयभागः - ४

भैरवोपासकः कश्चित् सिद्धिकांक्षी दृढव्रतः ।

कपालं मूर्धगं ह्येकीभूतं जायेत योगिनः ॥ १ ।

प्रसीदेद्भैरवो देवो बलेस्तस्य समर्पणात् ।

शङ्करोऽयं महायोगी भविता बलिरुत्तमः ॥ २ ॥

इत्येवं चिरमालोच्य समयं प्रतिपालयन् ।

शङ्करं परिचर्याभिस्तोषयामास कृत्यवित् ॥ ३ ॥

कश्चित् भैरवोपासकः सिद्धिकांक्षी दृढव्रतः (बभूव) । "योगिनः मूर्धगं कपालं एकीभूतं जायेत । तस्य बलेः समर्पणात् भैरवः देवः प्रसीदेत् । अयं शङ्करः महायोगी । उत्तमः बलिः भविता' इति एवं चिरं आलोच्य समयं प्रतिपालयन् कृत्यवित् शंकरं परिचर्याभिः तोषयामास ।

*பைரவரை வழிபடும் ஒருவன், சித்தியைப் பெற விரும்பி (அதற்கென) திடமான நோன்பு பூண்டு. "யோகியின் தலையில் உள்ள ஓடு ஒன்றாகக் கூடிவிடும். அதனைப் பலியாகக் கொடுப்பதால் பைரவதேவர் அருள்வார். இந்த சங்கரர் சிறந்த யோகி. உயர்ந்த பலியாக ஆவார்." என்றிவ்வாறு வெகுநாட்கள் திட்டமிட்டு தக்க நேரத்தை எதிர்பார்ப்பவனாகச் செயல்முறை அறிந்த அவன் சங்கரரைப் பணிவிடைகளால் மகிழ்வித்தான்.*

शुश्रूषयाऽतिप्रसन्नं गुरुमाह स भैरवः ।

दित्से बलिं भैरवाय तद्याचे भवतः शिरः ॥ ४ ॥

शुश्रूषया अति प्रसन्नं गुरुं सः भैरवः आह – "भैरवाय बलिं दित्से । तत् भवतः शिरः याचे ।

பணிவிடையால் மிகவும் மகிழ்ந்த குருவிடம் அந்த பைரவன் கூறினுன் – "பைரவருக்கு பலிதர விரும்புகிறேன். அதற்காக தங்கள் தலையை யாசிக்கிறேன்".

तत् श्रुत्वा शंकरस्तुष्टो वपुर्दयां हि याचितः ।
इति निश्चित्य तं प्राह नय मां विजनं वनम् ॥ ५ ॥
परैरविदितस्तत्र संविधेहि समीहितम् ।

तत् श्रुत्वा तुष्टः शंकरः "याचितः वपुः दयां हि ।" इति निश्चित्य तं प्राह – "मां विजनं वनं नय । परैः अविदितः तत्र समीहितं संविधेहि ।"

அதனைக் கேட்டு மகிழ்ந்த சங்கரர், யாசிக்கப்பெற்ற நான் (என்) உடலைக் கொடுப்பேன் எனத் தீர்மானித்து அவனைப் பார்த்துக் கூறினார் – "என்னை ஜனச்சந்தடியற்ற காட்டிற்கு அழைத்துச் செல்வாய். பிறரால் அறியப்படாதவனுக அங்கு விரும்பியதை நிறைவுறச் செய்".

इत्यादिष्टो वनं नीत्वा तमुपास्य च भैरवम् ॥ ६ ॥
छेत्तुं समाददे खड्गं शिरः शङ्करकन्धरात् ।

इति आदिष्टः तं वनं नीत्वा भैरवं च समुपास्य, शङ्करकन्धरात् शिरः छेत्तुं खड्गं समाददे ।

இவ்வாறு ஆணையிடப்பெற்ற அவன் அந்த சங்கரரைக் காட்டிற்கு அழைத்துச் சென்று பைரவரை வழிபட்டுப் பின் சங்கரரது கழுத்திலிருந்து தலையைத் துண்டிக்க கத்தியை எடுத்தான்.

तत्क्षणे पद्मपादोऽपि गुरुसन्दर्शनोत्सुकः ॥ ७ ॥
अध्यायत्स्वगुरुं ज्ञात्वा वृत्तं रोषवशङ्गतः ।

तत्क्षणे पद्मपादोऽपि गुरुसन्दर्शनोत्सुकः स्वगुरुं अध्यायत् । वृत्तं ज्ञात्वा रोषवशं गतः ।

*அந்த நொடியில் பத்மபாதரும் குருவைக்காண்பதில் ஆர்வ மிக்கவராகத் தன் குருவை நினைத்தார். நடந்ததை அறிந்து கோபத்தின் வசமடைந்தவரானார்.*

**नृसिंह तेजसाऽऽविष्टो वनमार्गात्त्वरान्वितः ॥ ८ ॥**

**भैरवोपासकं धृत्वा हननायोद्यतोऽभवत् ।**

**प्रसादितः शंकरेण तं मुमोचाथ साधकम् ॥ ९ ॥**

**(सः) नृसिंह तेजसा आविष्टः त्वरान्वितः वनं आगात् । भैरवोपासकं धृत्वा हननाय उद्यतः अभवत् । अथ शङ्करेण प्रसादितः तं साधकं मुमोच ।**

*நரசிம்மரின் வீரியம் உட்புகுந்தவராக வேகத்துடன் கூடிய வராகக் காட்டிற்கு வந்தார். பைரவரை வழிபடும் பைரவனைப் பிடித்துக் கொல்ல முற்பட்டவரானார். பின் சங்கரரால் வேண்டப் பெற்றவராக அந்த ஸாதகனை விடுவித்தார். (பைரவனைக் கிழித்துக் கொன்றார் என்றும் கூறுவர்)*

**प्रणतं साधकं वीक्ष्य शङ्करः सिद्धिमुत्तमाम् ।**

**तस्यानुजगृहे योगी नृसिंहस्य प्रसादतः ॥ १० ॥**

**साधकं प्रणतं वीक्ष्य नृसिंहस्य प्रसादतः तस्य उत्तमां सिद्धिं योगी शङ्करः अनुजगृहे ।**

*ஸாதகன் வணங்கியதைக் கண்டு நரசிம்மரின் அருளால் அவனுக்கு உயர்ந்த (பைரவரின் அருள் பெறுதலாகிய) சித்தியை யோகி சங்கரர் அருளினார்.*

**अहोबिलगिरेरग्रे पुण्यारण्ये कदाचन ।**

**सनन्दनश्चचारोग्रं नृसिंहमनुना तपः ॥ ११ ॥**

**कदाचन अहोबिलगिरेः अग्रे पुण्यारण्ये सनन्दनः नृसिंह मनुना उग्रं तपः चचार ।**

*ஒருசமயம் அஹோபில மலையின் மேல் புண்யமிக்கக் காட்டில் ஸநந்தனர் (பத்மபாதரின் முன்னிருந்த பெயர்) நரஸிம்ம மந்திரத்தால் கடுமையான தவத்தைச் செய்தார்.*

बहुभिर्वत्सरैः सिद्धिर्न प्राप्ता मन्त्रजापिना ।
तं पप्रच्छागतस्तत्र किरातः क्लिश्यसे कुतः ॥ १२ ॥
को वाऽत्र मृग्यते विद्वन्निति पृष्टोऽब्रवीद्द्विजः ।

मन्त्रजापिना (सनन्दनेन) बहुभिर्वत्सरैः सिद्धिः न प्राप्ता । तत्र आगतः कश्चित् किरातः तं पप्रच्छ – "विद्वन् ! कुतः क्लिश्यसे? किं वा अत्र मृग्यते? इति पृष्टः द्विजः अब्रवीत् ।

*மந்திரம் ஜபித்துக் கொண்டிருந்த ஸநந்தனரால் பல ஆண்டுகளாலும் சித்தி அடையப்பெறவில்லை. அங்கு வந்த ஒரு வேடன் அவரைக் கேட்டான் – "அறிவாளியே ! ஏன் சிரமப் படுகிறீர்? எதனைத்தான் இங்கு தேடுகிறீர்?" இவ்வாறு கேட்கப் பட்ட அந்தணன் கூறினார்.*

कश्चित्सिंहमुखः कण्ठादधो मर्त्यवपुर्मया ॥ १३ ॥
मृग्यतेऽत्र वसन् सोऽपि नायात्यक्षिपथं मम ।

कण्ठात् अधः मर्त्यवपुः सिंहमुखः कश्चित् मया मृग्यते । सः अत्र वसन् अपि मम अक्षिपथं न आयाति ।

*கழுத்துக்குக் கீழ் மனித உடல் கொண்டவரும் சிங்க முகம் உள்ளவருமான ஒருவர் என்னால் தேடப்படுகிறார். அவர் இங்கு இருப்பவராயினும் என் கண் வழியில் வரவில்லை.*

यद्यस्त्यत्र मृगोऽवश्यमानेष्ये मा कृथाः श्रमम् ॥ १४ ॥
इतीरयन्क्षणादेव प्रविशन्स वनान्तरम् ।
निबध्य गाढं नृहरिं लताभिस्तत्पुरो न्यधात् ॥ १५ ॥

अत्र मृगःयदि अस्ति, अवश्यं आनेष्ये । श्रमं मा कृथाः । इति ईरयन् सः क्षणादेव वनान्तरं प्रविशन् नृहरिं लताभिः गाढं निबध्य तत्पुरः न्यधात् ।

*இங்கு அந்த பிராணி இருக்குமேயானால் கட்டாயம் கொணர்வேன், சிரமப்பட வேண்டாம், என்று கூறிய அவன் நொடியில் காட்டின் இடையே புகுந்து நரசிம்மரைக் கொடிகளால் அழுந்தக் கட்டி அவர் முன் கொண்டுவைத்தான்.*

मनोवाचामगम्यस्त्वं वनेचरवशे कथम्।

अभूरित्यद्भुताविष्टहृदा विज्ञापितो विभुः ॥ १६ ॥

अमुनैकाग्रचित्तेन ध्यातोऽहमबहिर्दृशा।

किं चिन्तया ते तपसा प्रीय इत्याह तं हरिः ॥ १७ ॥

"त्वं मनोवाचां अगम्यः। वनेचरवशे कथं अभूः।" इति अद्भुताविष्टहृदा विभुः विज्ञापितः। "एकाग्रचित्तेन अबहिर्दृशा अमुना अहं ध्यातः। चिन्तया किम्? ते तपसा प्रीये" इति हरिः तं जगाद।

*நீர் மனத்திற்கும் சொற்களுக்கும் அகப்படாதவர். இந்தக் காட்டில் சுற்றுபவனின் வசத்தில் எப்படி ஆனீர்? என வியப்பால் நிரம்பிய மனத்தினரான ஸநந்தனரால் எங்கும் நிரம்பியுள்ள நரஸிம்மர் விண்ணப்பிக்கப்பெற்றார். "ஒரு முனைப்பட்ட மனம் உள்ளவனும் வெளிநோக்கற்றவனுமான இவனால் நான் மனத்தில் உருவகப்படுத்தப்பட்டேன். சிந்தையால் என்ன? (சிந்தை எதற்கு?) உன் தவத்தால் மகிழ்ச்சி அடைகிறேன்" என்று ஹரி அவரைப் (பார்த்து)க் கூறினார்.*

प्रसन्नो नृहरिस्तस्य सदा सन्निहितस्तनौ।

नापेक्षते स्मरणमप्यव्याजकरुणो विभुः ॥ १८ ॥

प्रसन्नः नृहरिः तस्य तनौ सदा सन्निहितः। अव्याजकरुणः विभुः स्मरणमपि नापेक्षते।

*அருள் மிக்க நரஸிம்மர் அவர் உடலில் எப்போதும் தங்கியுள்ளார். ஒருவித எதிர்பார்வையுமற்ற கருணையுள்ள இறைவன் நினைவிற்கொள்ளுதலைக்கூட எதிர்பார்ப்பதில்லை.*

ततः पद्मपदा साकं बदरीं प्रत्यगाद्गुरुः।

विलोक्य मुमुदे रम्यां बदरीशालयच्छविम् ॥ १९ ॥

ततः गुरुः पद्मपदा साकं बदरीं प्रत्यगात्। रम्यां बदरीशालयच्छविं विलोक्य मुमुदे।

*பிறகு குரு ஸ்ரீ சங்கரர் பத்மபாதருடன் கூட பதரியை அடைந்தார். அழகிய பதரிநாதரின் ஆலயத்தொளியைக் கண்டு மகிழ்ந்தார்.*

केरलीयांस्तत्र पूजाविधानाय समादिशत्।

तत्र बदरीवने पूजाविधानाय केरलीयान् समादिशत्॥

*அங்கு பூஜை செய்யக் கேரள தேசத்தினரை நியமித்தார்.*

कदाचित्तत्र हैमाद्रौ चरन्तं जाह्नवीतटे॥ २०॥

सिञ्चन्तं क्षीरवाराशिवीचीसदृशवीक्षितैः।

योगीशानं गौडपादं दृष्ट्वा तं प्राणमद्गुरुः॥ २१॥

कदाचित् तत्र हैमाद्रौ जाह्नवीतटे चरन्तं, क्षीरवाराशिवीचीसदृशवीक्षितैः सिञ्चन्तं योगीशानं गौडपादं दृष्ट्वा तं गुरुः प्राणमत्।

*ஒருசமயம் அங்கு (இமயப்) பனிமலையில் கங்கைக் கரையில் நடமாடிவந்தவரும் பாற்கடலின் அலைகள் போன்ற அருள் நோக்குகளால் குளிர்விப்பவரும் (தாபம் போக்குபவரும்) யோகிகளில் சிறந்தவருமான கௌடபாதரைப் பார்த்துக் குருவான சங்கரர் அவரை வணங்கினார்.*

तस्याशिषापास्तमोहः चित्तत्वस्फूर्तिमांस्तदा।

ध्यायंस्तं परमाचार्यं वनमध्यं प्रविष्टवान्॥ २२॥

तस्य आशिषा अपास्तमोहः तदा चित्तत्वस्फूर्तिमान्, तं परमाचार्यं ध्यायन् वनमध्यं प्रविष्टवान्।

*அவரது அருளால் கலக்கம் நீங்கியவராக பேரறிவு துலங்கப் பெற்றவராக அந்த தன் குருவின் குருவான கௌடபாதரையே தியானித்துக்கொண்டு காட்டின் நடுவில் நுழைந்துவிட்டார்.*

तत्र निध्यायतश्चेतो लग्नमाद्ये गुरूत्तमे।

वटद्रुमतलासीने ध्यातः सोऽप्याविरास्त ह॥ २३॥

तत्र निध्यायतः चेतः आद्ये वटद्रुमतलासीने गुरूत्तमे लग्नम्। ध्यातः सः अपि आविरास्त ह।

*அந்தக் காட்டின் நடுவில் தியானத்தில் ஆழ்ந்தவரது மனம் ஆதிகுருவானவரும் ஆலமரத்தடியில் அமர்ந்தவருமான குரு வரரிடம் பதிந்தது. தியானிக்கப்பெற்ற தக்ஷிணாமூர்த்தியான அவரும் (சங்கரர்) முன் தோன்றினார்.*

मौनव्याख्याप्रकटितपरतत्त्वानुभूतिदम्।

ववन्दे दक्षिणामूर्तिं आत्मतत्त्वप्रभासकम्॥ २४॥

मौनव्याख्या - प्रकटित - परतत्त्व - अनुभूतिदं, आत्मतत्त्वप्रभासकं दक्षिणामूर्तिं ववन्दे।

*மௌனமாகிய பெருவிளக்க முறையால் வெளியாக்கப்பட்ட பரம்பொருளின் உணர்வை அளிப்பவரும் ஆத்மநிலையை அறிவொளி மூலம் துலக்குபவருமான தக்ஷிணாமூர்த்தியை வணங்கினார்.*

स्तुवन्तं तं परेशानो दीक्षयामास मुद्रया।

भद्रया, गुरुदिष्टं तद्ब्रह्म तद्धृद्यभासत॥ २५॥

परेशानः स्तुवन्तं तं भद्रया मुद्रया दीक्षयामास। गुरुदिष्टं तत् ब्रह्म तद्धृदि अभासत।

*பரமேசுவரன் (தன்னை) துதித்துக்கொண்டிருக்கும் அவரை மங்களமான ஞான முத்திரையால் அருள்பாலித்தார். குருவால் உணர்த்தப்பெற்ற அந்தப் பரம்பொருள் அவரது உள்ளத்தில் துலங்கிற்று.*

अन्तर्हिते भगवति दक्षिणास्ये ततः प्रयान्।

नेपालादीनतिक्रम्य दत्ताश्रममवाप सः॥ २६॥

भगवति दक्षिणास्ये अन्तर्हिते, ततः प्रयान्, सः, नेपालादीन् अतिक्रम्य दत्ताश्रमं अवाप।

*பகவான் தக்ஷிணாமூர்த்தி மறைந்ததும் அங்கிருந்து கிளம்பிய ஸ்ரீ சங்கரர் நேபாளம் முதலியவற்றைத் தாண்டி தத்தாசிரமத்தை அடைந்தார்.*

**स्वच्छन्दचारी सर्वत्र स्वेच्छाकलितविग्रहः ।**

**दत्तस्तमानयद्योगी कैलासं गिरिमुत्तमम् ॥ २७ ॥**

**सर्वत्र स्वच्छन्दचारी स्वेच्छाकलितविग्रहः योगी दत्तः तं उत्तमं गिरिं कैलासं आनयत् ।**

*தன் விருப்பப்படி ஸஞ்சரிப்பவரும் தன் விருப்பப்படி உருவமமைத்துக்கொள்பவரும் யோகியுமான தத்தர் அவரைச் சிறந்த மலையான கைலாஸத்திற்கு அழைத்து வந்தார்.*

**पार्वतीस्कन्दनन्याद्यैः सेवितं परमेश्वरम् ।**

**विस्मयाविष्टहृदयो ददर्श गिरिशं यतिः ॥ २८ ॥**

**पार्वती-स्कन्द-नन्याद्यैः सेवितं गिरिशं परमेश्वरं विस्मय - आविष्ट-हृदयः यतिः ददर्श ।**

*பார்வதி கந்தர் நந்தி முதலானோரால் வழிபடப்பெற்ற மலைவாழ்பவரான பரமேசுவரனை அந்தத் துறவி விந்தைக்கு ஆட்பட்ட மனத்தினராகக் கண்டார்.*

**प्रणमन्तं यतिं प्राह प्रेम्णा स परमेश्वरः ।**

**मदंशतस्त्वं जातोऽसि भुवि चाद्वैतबोधकः ॥ २९ ॥**

**एतत्प्रतिगृहाण त्वं लिङ्गपञ्चकमादरात् ।**

**पूजयैतानि विधिना प्रयतो विश्वभूतये ॥ ३० ॥**

**सः परमेश्वरः प्रणमन्तं यतिं प्रेम्णा प्राह – "त्वं मदंशतः जातः असि । भुवि अद्वैतबोधकश्च । त्वं एतत् लिङ्गपञ्चकं आदरात् प्रतिगृहाण । एतानि प्रयतः विश्वभूतये विधिना पूजय ।**

*அந்த பரமேசுவரன் வணங்கிக்கொண்டிருக்கும் துறவியைப் பார்த்துக் கூறினார் – "நீர் எனது அம்சத்திலிருந்தும் தோன்றி யிருக்கிறீர். பூமியில் அத்வைத தத்துவத்தைப் போதிப்பவராக*

ஆவீர். நீர் இந்த ஐந்து லிங்கங்களையும் பக்தியுடன் பெற்றுக் கொள்வீர். முழு முயற்சியுடன் கூடியவராக இவற்றை உலக நன்மைக்காக முறைப்படி பூஜிப்பீர்.

शङ्करो मोदभरितः प्रणम्य परमेश्वरम् ।

गृहीत्वा पञ्च लिङ्गानि दत्तहस्तावलम्बनः ॥ ३१ ॥

दत्तेन सह संप्राप क्षणाद्बदरिकावनम् ।

दत्तेनानुगृहीतः स प्रतस्थे दिग्जयेच्छया ॥ ३२ ॥

मोदभरितः शङ्करः परमेशानं प्रणम्य पञ्च लिङ्गानि गृहीत्वा दत्तहस्तावलम्बनः दत्तेन सह बदरिकावनं क्षणात् संप्राप । दत्तेन अनुगृहीतः सः दिग्जयेच्छया प्रतस्थे ।

*மகிழ்ச்சி நிரம்பிய சங்கரர் பரமேசுவரனை வணங்கி (அவர் அளித்த)* ஐந்து லிங்கங்களை ஏற்று தத்தரது கைகளைப் பிடிப் பாக்கிக் கொண்டவராக தத்தருடன் விநாடியில் பதரிகா வனத்தைச் சென்றடைந்தார். தத்தரால் ஆசீர்வதிக்கப்பெற்று திக்விஜயம் செய்ய விருப்பத்துடன் கிளம்பினார்.

केदारेशं महाकालं सोमेशं प्रणवेश्वरम् ।

त्र्यम्बकं घुसृणेशानं नागनाथं भिषक्पतिम् ॥ ३३ ॥

भीमेशं च प्रणम्याथ क्रमाच्छ्रीशैलमागमत् ।

*(அந்வயத்தில் மாறுதல் இல்லை)* கேதாரநாதரையும் மஹா காலரையும் ஸோமநாதரையும் ஓங்காரேச்வரரையும் திரியம் பகரையும் குஸ்ருணேச்வரரையும் நாகநாதரையும் வைத்ய நாதரையும் பீமேசுவரரையும் வணங்கிவிட்டுப் பிறகு வழியில் ஸ்ரீ சைலத்தை வந்தடைந்தார்.

कश्चित्कालमुवासात्र मल्लिकार्जुन सेवकः ॥ ३४ ॥

सिद्धिक्षेत्रे परिचरन् योगिनोऽत्र तपस्यतः ।

विन्दन्नात्मधियं लीनां समाधौ निर्विकल्पके ॥ ३५ ॥

शुद्धां मतिकृतैर्दोषैः अलिप्तां व्यचरत्ततः ।

अत्र मल्लिकार्जुनसेवकः कञ्चित्कालं उवास। सिद्धिक्षेत्रे अत्र तपस्यतः योगिनः परिचरन् आत्मधियं निर्विकल्पके समाधौ लीनां मतिकृतैः दोषैः अलिप्तां शुद्धां विन्दन् ततः व्यचरत्।

*இங்கு மல்லிகார்ஜுனரை வழிபடுபவராகச் சில நாட்கள் தங்கினார். தவச்சித்தி பெறுவதற்கு ஏற்ற இடமாகிய அங்கு தவமியற்றும் யோகிகளுக்குப் பணிவிடைபுரிபவராகத் தனது எண்ணம் பேத உணர்வற்ற ஆழ்மனப்பதிவில் மறைந்ததாயும் அறிவால் ஏற்படும் அப்பழுக்குகளால் தீண்டப்பெறாததாயும் தூயதாயும் இருப்பதை உணர்ந்து, பிறகு அங்கிருந்து கிளம்பினார்.*

अङ्के निधाय स्वसुतं व्यसुं ब्राह्मणदम्पती॥ ३६॥

उपजग्मतुराचार्यं दृष्ट्वा तौ दयया द्रुतः।

जगत्त्रयीरक्षणाय दीक्षितोऽजीवयन्मृतम्॥ ३७॥

ब्राह्मणदम्पती व्यसुं स्वसुतं अङ्के निधाय आचार्यं उपजग्मतुः। तौ दृष्ट्वा दयया द्रुतः जगत्त्रयीरक्षणाय दीक्षितः सः मृतं अजीवयत्।

*ஒரு பிராமண தம்பதி உயிர்பிரிந்த தன்மகனை மடியிலிட்டு ஆசாரியரைச் சரணடைந்தார்கள். அவர்களைக்கண்டு தயையால் இளகியவரும் மூவுலகையும் காப்பதென்ற நியமம் பூண்டவருமான அவர் (சங்கரர்) இறந்தவனைப் பிழைப்பித்தார்.*

रौप्यपीठे तुलुग्रामे चन्द्रेश्वरमथानमत्।

अथ तुलुग्रामे रौप्यपीठे चन्द्रेश्वरं आनमत्।

*பிறகு துளு மொழி பேசும் கிராமமான உடுப்பியில் சந்திரேசுவரரை வணங்கினார்.*

आसीत्प्रभाकरो नाम सुबुद्धिर्यज्वनां वरः॥ ३८॥

सुतस्तस्याभवन्मारो रूपेण क्षमया मही।

प्रभाकरो नाम सुबुद्धिः यज्वनां वरः आसीत्। तस्य सुतः रूपेण मारः क्षमया मही अभवत्।

*பிரபாகரர் என்ற நல்லறிவுகொண்டவரும் வேள்விபுரிபவர்களில் சிறந்தவருமான ஒருவர் இருந்தார். அவரது பிள்ளை அழகால் மன்மதனாகவும் பொறுமையால் பூமிதேவியாகவும் இருந்தான்.*

जडो धिया न शृणुते न वक्त्यत्ति पिबत्यपि ॥ ३९ ॥

(सः) धिया जडः । न शृणुते, न वक्ति (न) अत्ति (न) पिबत्यपि।

*அவன் அறிவால் ஜடன், (சொன்னதைக்) கேட்கமாட்டான். பேசமாட்டான். உண்ணமாட்டான், (நீர்கூட) பருகமாட்டான்.*

तं पिता तनयं मुग्धं प्रणिपात्य गुरोः पुरः ।

प्रार्थयामास विनतः सुतजाड्यापनोदनम् ॥ ४० ॥

पिता तं मुग्धं तनयं गुरोः पुरः प्रणिपात्य विनतः सुतजाड्यापनोदनं प्रार्थयामास ।

*தகப்பனார் அந்த ஒன்றுமறியாத புதல்வனை குருவின் முன்னர் கிடத்தி வணங்கியவராகப் புதல்வனின் ஜடத்தன்மை நீக்கத்தைக் கோரினார்.*

कस्त्वं किमेवं जडवद्भासीत्युक्तः स बालकः ।

प्रत्यवादीज्जडो नाहं वपुरेतन्मतं जडम् ॥ ४१ ॥

मत्सन्निधौ चेतनवच्चेष्टते नात्र सन्दिहे ।

त्वं कः? एवं जडवत् किं भासि? इति उक्तः सः बालकः प्रत्यवादीत् – ''अहं न जडः । एतत् वपुः जडं मतम् । मत्सन्निधौ चेतनवत् चेष्टते । अत्र न सन्दिहे ।

*நீ யார்? இவ்வாறு ஜடனாக ஏன் காணப்படுகிறாய்? என்று கேட்கப்பட்ட அந்த சிறுவன் பதில் கூறினான். ''நான் ஜடன் அல்ல. இந்த உடல் ஜடம் என (எல்லோராலும்) ஒப்புக்கொள்ளப்பட்டது. என் அருகாமையில் (அது) சேதனன் போல் செயல் படுகிறது. இதில் நான் சந்தேகப்படவில்லை''.*

तेनोक्तमिति चिद्रूपं करस्थामलकीसमम् ॥ ४२ ॥

श्रुत्वा विस्मयमापुस्ते प्रभाकरमुखा द्विजाः ।

तेन इति उक्तं करस्थामलकीसमं चिद्रूपं श्रुत्वा प्रभाकरमुखाः ते द्विजाः विस्मयं आपुः ।

*அவனுல் இவ்வாறு கூறப்பட்டதும் உள்ளங்கையில் உள்ள நெல்லிக்கனி போன்றதுமான ஆத்ம நிலையைக் கேட்டு பிரபாகரர் முதலான அந்த அந்தணர்கள் வியப்பெய்தினர்.*

ऊचे गुरुस्तत्पितरं नायं वस्तुमिहार्हति ॥ ४३ ॥

देहेऽहन्ता च गेहादौ ममता नास्य विद्यते ।

गुरुः तत्पितरं ऊचे – "अयं इह वस्तुं न अर्हति । अस्य देहे अहन्ता न विद्यते । गेहादौ ममता च (न विद्यते) ।

*குருவான சங்கரர் அந்தச்சிறுவனின் தந்தையை பார்த்துக் கூறினுர் – "இவன் இங்கு வசிக்கத்தக்கவனல்ல. இவனுக்கு உடலில் நான் என்ற எண்ணமும் வீடு முதலானவற்றில் தன்னுடையதென்ற எண்ணமும் இல்லை.*

विनोपदेशं तत्त्वानि वेत्ति प्राक्तनसंस्कृतेः ॥ ४४ ॥

अतो मच्छिष्यतां यातु यतिर्मामनुगच्छतु ।

प्राक्तनसंस्कृतेः (कारणात्) उपदेशं विना तत्त्वानि वेत्ति । अतः मच्छिष्यतां यातु । यतिः (भूत्वा) मां अनुगच्छतु ।

*முன் பிறவியின் மனப்பக்குவத்தால், உபதேசமின்றி தத்துவத்தை உணர்ந்துள்ளான். அதனுல் (இவன்) எனது சீடனுக ஆகட்டும். துறவியாகி என்னைப் பின்தொடரட்டும்.*

इत्यादिश्य द्विजं बालं हस्तामलकसंज्ञितम् ॥ ४५ ॥

संन्यासविधिना कृत्वा दीक्षितं प्रययौ ततः ।

इति द्विजं आदिश्य, बालं संन्यासविधिना दीक्षितं हस्तामलकसंज्ञितं कृत्वा ततः प्रययौ ।

*இவ்வாறு அந்தணருக்கு உத்திரவிட்டு, அச்சிறுவனை ஸன்யாஸ முறைப்படி விரதம் பூண்டவனுக ஹஸ்தாமலகர் என்ற பெயர்கொண்டவனுக ஆக்கி அங்கிருந்து கிளம்பினுர்.*

अब्धितीरे चङ्क्रमणाद्रौक्ष्यादत्युपवेशनात् ॥ ४६ ॥

भगन्दरो नाम गदो गुरुराजमपीडयत् ।

अब्धितीरे चङ्क्रमणात् रौक्ष्यात् अत्युपवेशनात् भगन्दरः नाम गदः गुरुराजं अपीडयत् ।

*கடற்கரையில் சுற்றுவதாலும் வரட்சியாலும் அதிக அளவில் உட்காருவதாலும் பகந்தரம் என்ற நோய் குருக்களின் தலைவரான சங்கரரைத் துன்புறுத்தியது.*

कश्चिद्विनेयो गिर्याख्यः शुश्रूषां श्रद्धया गुरोः ॥ ४७ ॥

आतनोद्रक्तसंसिक्तवस्त्रसंशोधने रतः ।

श्रान्ताचार्य पदांभोज संवाहनपरायणः ॥ ४८ ॥

गिर्याख्यः कश्चित् विनेयः श्रद्धया रक्तसंसिक्तवस्त्रसंशोधने रतः श्रान्ताचार्यपदांभोजसंवाहनपरायणः गुरोः शुश्रूषां आतनोत् ।

*கிரி என்ற ஒரு சீடன் சிரத்தையுடன் ரத்தம் சிந்திய ஆடைகளைத் துவைப்பதில் ஈடுபட்டவனாக, களைத்த ஆசாரியரின் தாமரை போன்ற திருவடிகளைப் பிடித்துவிடுவதில் ஈடுபட்டவனாக குருவின் பணிவிடையைச் செய்துவந்தான்.*

गुरूपदिष्टं नो वेद्मि यथान्य इति चिन्तया ।

व्यथितोऽन्तः सदा दीनो न तद्व्यक्तं वदत्यपि ॥ ४९ ॥

यथा अन्यः (तथा) गुरूपदिष्टं नो वेद्मि इति चिन्तया अन्तः व्यथितः सदा दीनः (अभवत्) । तत् व्यक्तं न वदत्यपि ।

*மற்றவர் போல் குருவால் உபதேசிக்கப்பட்டதை தான் புரிந்துகொள்ளவில்லை என்ற கவலையால் உள்ளத்தில் துன்பப் பட்டவனாக எப்போதும் கவலைப்பட்டவனாக இருந்தான். அதனை வெளிப்படையாகக் கூறுகிறதில்லை.*

कदाचिद्गतवत्यस्मिन्वासः शोधयितुं गुरुः ।

उपदेष्टुमथासीनः प्रत्यैक्षत तदागमम् ॥ ५० ॥

